

# பாம்பு

பக்கத்து நாணு வாத்தியார் வீட்டில் புளியம் விறகு வாங்கிப் போட்டிருந்தார்களே, அதிலிருந்துதான் பாம்பு வந்திருக்க வேண்டும். காலையில் ரொம்ப நேரம் பேரம் பேசி, "என்ன சாமி வவுத்தில அடிக்கிறியே? கட்டை என்னா ஒஸ்தி பாரு." கடைசியில் வண்டிக் காரன் மாட்டை அவிழ்த்து வண்டியைச் சரித்து விட்டுப் போனதும் அந்த விறகு இன்னும் ஒரு வாரத்துக்கு வாசலிலேயே வெயிலில் காயப் போகிறது என்று எனக்குத் தெரியும். ஆனால் அதற்குள் ஒரு பாம்பு ஒளிந்துகொண்டிருப்பதை எனக்கு யாரும் சொல்லவில்லை.

சாயங்காலம் சிவராமன் சைக்கிளில் ஸ்டைலாக வந்து இறங்கினான். என்னைப் பார்க்க வருவதாகப் பேர் பண்ணிக்கொண்டு என் தங்கையை 'சைட்' அடிக்கத்தான் வருவான். சலவைச் சட்டையும்,

வேட்டியும், குட்டிக்கியூரா பவுடரும், நெற்றியில் சந்தனக்கீற்றுமாக வந்து இறங்குவதிலேயே கீழவீதிப் பெண்கள் அனைவரும் மயங்கிப் போவதாக அவனுக்கு நினைப்பு. அந்த நம்பிக்கையைக் கெடுப்பானேன் என்று நானும் வத்ஸலாவும் அவன் போனபிறகுதான் அவனைப் பற்றிச் சிரித்துப் பேசிக்கொள்வோம்.

சிவாவின் சைக்கிள் ராலிக்குப் பச்சையில் கைப்பிடிக்குப் பூண், சக்கரத்தின் நடுவில் வர்ணக் கொசகொச, பளபளவென்று காரியர் எல்லாம் வைத்து வையாளிக் குதிரை மாதிரிதான் இருக்கும். வாசலில் நிறுத்திவிட்டு, 'வா சிவா' என்று வத்ஸலா சொன்னதில் ஒருவாறு மோகித்துப் போய்த் திண்ணையில் என் பக்கத்தில் உட்கார்ந்துகொள்ள வத்ஸலா நிலைப்படியில் நிற்க அவள் காது கேட்கும்படியாகத் தன்னைப் பற்றி ரொம்பப் பீற்றிக்கொண்டான். டெஸ்ட் மாட்ச் பார்க்க மெட்ராஸ் போகப் போகிறானாம்; அவன் மாமா மிடில் ஈஸ்ட்டில் இருக்கிறாராம்; மற்றொரு மாமா நாராயண் கம்பெனியில் வேலை பார்ப்பதால், "எந்தப் புதுப்படம் போக வேண்டுமானாலும் என்னிடம் சொல்லு" என்றான்.

வத்ஸலாவை அம்மா உள்ளே கூப்பிட அவன் முகத்தில் லைட் அணைந்து போயிற்று. அப்போதுதான் பாம்பைப் பார்த்தேன். முதலில் பாம்பு தெரியவில்லை. சைக்கிளுக்கு ஏதோ புது மாதிரி அலங்காரம் என்றுதான் எனக்குத் தோன்றியது. ஒரு மாதிரி பழுப்புப் பச்சை பச்சையாகச் சைக்கிளின் கரும்பச்சைக்கு மாட்சிங்காக அதன் சாய்ந்த குறுக்குக் கம்பியில் சுருட்டிக்கொண்டிருந்தது. "சிவா, என்னடா புதுசா போட்டிருக்கே சைக்கிளுக்கு?"

"எங்க?" என்றான்.

"குறுக்குக் கம்பியில்" என்று நான் சொல்லி முடிப்பதற்குள் அது கொஞ்சம் நகரவே அது அலங்காரம் இல்லை பாம்பு என்று புரிந்தது. எனக்கு மயிர்க்கால்கள் படக்கென்று நின்றுகொண்டன. 'பா பா பா' என்று ஜனகா பாட்டுச் சொல்லிக்கொள்வதுபோல ஆரம்பித்தேன்.

"என்னடா?"

"உன் சைக்கிள்ல பாரு ப ப பாம்பு!"

அவனுக்கு உடனே கண்டுபிடிக்க முடியாமல், "எங்கடா எங்கடா" என்று பேஷ்கார் வீட்டுப் பக்கம் நோக்கினான்.

"சைக்கிள்ல பா பா" என்றேன். "பெரிய பா."

கொஞ்சம் நேரம் கழித்துத்தான் "பார்" என்று சொல்ல முடிந்தது. அதற்குள் சிவராமனும் அதைப் பார்த்துவிட்டான். "ரங்கா என்னடா பண்றது" என்றான். உடனே என்ன செய்ய என்று புலப்படாத போது வத்ஸலா வந்துவிட்டதால், சிவராமனுக்குத் தன் வீரத்தைக் காட்ட வேண்டியது அவசியமாயிற்று. "வத்ஸலா ஒரு கிரிக்கெட் பாட் இருக்கா?" என்றான்.

"எதுக்கு?"

"பபப" என்றேன்.

"பயப்படாதே ரங்கா. வத்ஸலா, நீயும் பயப்படக் கூடாது. என் சைக்கிள்ல ஒரு பாம்பு ஏறிண்டிருக்கு!" அவள், நாங்கள் எதிர்பார்த்த அளவுக்குப் பயப்படாமல் 'எங்கே' என்று கிட்டே போய் உன்னிப்பாகப் பார்த்தாள். "ஆமாம், பாம்புதான்" என்றாள்.

"அடி மூதேவி கிட்டப் போகாதடி ... கடிச்சுக் கிடிச்சு வெச்சுரும்!" என்றேன்.

"வத்ஸலா, கிட்டப் போகக் கூடாது நீ போய் ஏதாவது அடிக்கறதுக்கு எடுத்துண்டு வாயேன்" என்றான் சிவராமன். என் தங்கையே அருகில் போய் பார்த்திருக்கிறாள் என்று ஒரு இன்ச் முன்னால் சென்று அதைக் கூர்ந்து பார்த்தேன். இலங்கைப் பிரச்னை போல முறுக்கிக்கொண்டிருந்தது. வாத்தியார் வீட்டு விறகுக் குப்பலிலிருந்து, என்ன தோன்றிற்றோ! சாயங்கால வேளையாயிற்றே பொடி நடையாக வெளியே உலாத்திவிட்டு வரலாம் என்று கிளம்பியிருக்கிறது போலும்.

திரும்ப வழி தெரியாமல் சைக்கிளில் ஏறிக்கொண்டுவிட்டது. அதற்குப் போதாத காலம்!

"என்ன பண்ணப் போறே?" என்றாள் வத்ஸலா.

"என்ன கேள்வி இது வத்ஸலா! அடிக்கப் போறோம்."

"பாவம்டா அது."

"பாவமா? எங்காவது விஷத்தைக் கக்கிக் கிக்கி வெச்சுதுன்னா தெரியும். போடி உள்ள! சொல்றதைக் கேளு. பாட்டை எடுத்துண்டு வா. அம்மா கிட்டச் சொல்லாதே, ஊரைக் கூட்டிடுவா."

நாங்கள் இரண்டு பேரும் பாம்பைப் பார்த்துக்கொண்டிருப்பதை அவ்வழியே சென்ற பால் டிப்போ கோவிந்தன் பார்த்து, 'என்ன சாமி?' என்றான்.

"ஒண்ணுமில்லை பாம்பு, கோவிந்தா."

"எங்க?" என்றான்.

"சைக்கிள்ல பாரு." இப்போது அந்த ஜந்து இன்னும் இன்னும் தன்னை முறுக்கிக்கொள்ள, தலை நகர்ந்து கொஞ்சம் நேரம் கழித்துத் தான் வால் நகர்ந்தது. கோவிந்தன் அதைக் குறிவைத்துக் கல்லெடுத்து எறிய, குறி தப்பி நாணு வாத்தியார் வீட்டில் போய்ச் சிதற, அவர் "யாரது அரைக்கல்லை வீசறது?" என்று விசாரிக்க வெளியே வந்தபோது, "பாம்பு ஸார்" என்றதும், சட்டென்று கதவைச் சார்த்திக் கொண்டுவிட்டார். அப்புறம் அவர் குடும்பத்தில் யாரும் வெளியே வரவில்லை (ஒரு மனைவியும் நான்கு பெண்களும்.) இதனிடையில் வத்ஸலா கட்டுப்போட்ட என் கிரிக்கெட் 'பாட்'டை எடுத்துக் கொண்டு வந்து சிவராமனிடம் கொடுத்தாள். அவன் அதைச் சோதித்துப் பார்த்து, சற்றுத் தயக்கத்துடனே அணுகினான்.

சிவராமனுக்கு முன்னே பின்னே பாம்பு அடித்துப் பழக்கம் இல்லை என்று தெரிந்தது. அதை இரண்டாகப் பிளந்துவிடும் நோக்கத்துடன் காட்டு வீசு வீசினான். பாட் பாம்பின் மேல் படாமல் சைக்கிளின் சீட்டில் பட்டு, அது சரிந்து விழுந்தது.

பாம்புக்கு உடனே அபாயம் புரிந்துபோய், சரசரவென்று தன்னை அவிழ்த்துக்கொண்டு கீழே விழுந்து நெளிந்து நெளிந்து நிமிஷமாய் முனிசிபாலிட்டி சாக்கடைக்குள் போய் ஒளிந்துகொண்டுவிட்டது. சாக்கடை எங்கள் வீட்டு வாசலுக்குச் சலுகையால் மூன்றடிக்குக் குழாய் போட்டிருந்த இடத்தில் அக்கடா என்று நுழைந்து கொண்டு விட்டது. கோவிந்தன், "தம்பி, இப்படியா வீசுவ? தப்பிச்சிக்கிச்சு பாரு" என்றான்.

சிவராமன் வத்ஸலாவைப் பார்த்துக்கொண்டே, "இரு கோவிந்தா, எங்க போயிடறது? நீங்கள்லாம் என்னைக் குழப்பாம இருந்தா சரி" என்றான்.

இதற்குள் தாத்தா மெல்ல வெளியே வந்தார். நடவடிக்கைகளைத் தற்காலிகமாக ஒத்திப்போட வேண்டியிருந்தது. தாத்தாவுக்கு எழுபத் தேழு வயசு. ரிட்டையர் ஆனதற்கப்புறமே அவருக்கு ஒரு வகையான செனிலிட்டி ஏற்பட்டு, பாட்டி சுமங்கலியாய்ப் போன பிற்பாடு யார் எது என்றெல்லாம் குழப்பங்கள் உண்டு. அவருக்குத் திடீரென்னு, ஸ்ரீரங்கத்தில் இருக்கிறோமா, டில்லியில் சர்விஸில் இருக்கிறோமா என்று குழப்பங்கள் வந்துவிடும்.

என்ன 'ரங்கா' என்று சில வேளை சரியாகக் கூப்பிடுவார். சிலவேளை, "யார்றி உள்ள? வெண்ணைக்காரன் வந்திருக்கான் பாரு" என்பார். சமீபகாலமாக அவருக்குத் தினசரி பங்குனி உத்தரம் என்றும் வாசலில் ரதம் போகும் என்றும் நம்பிக்கை. சாயங்காலம் வாசலில் கயிற்றுக் கட்டிலைப் போட்டுக்கொண்டு ரதம் நோக்கி உட்காருவார்.

எங்கே பாம்பு பதுங்கியிருந்ததோ அதன் மேலேயே கட்டில் போட்டுக்கொண்டு உட்கார வந்தார். அவருக்கு இப்போது பக்கத்து வீட்டில் விறகு வாங்கியதையும், பாம்பு வந்ததையும், சாக்கடைக்குள் புகுந்ததையும் விளக்குவதற்குள் விடிந்தாற்போல்தான் என்று பேசாமல் தாத்தாவைக் கட்டிலோடு தூக்கி அந்தப் பக்கம் வைத்து விடுவது என்று முடிவெடுத்தோம். திடீரென்று உயரமாகித் தானாகக் கட்டில் நகர்வதைத் தாத்தா கவனித்து, "நான் இன்னம் செத்துப் போகலைடா" என்றார். "பேசாம இங்க உட்காரு தாத்தா" என்றான் கோவிந்தன். "பங்குனி ரதம் வந்ததா?" என்றார்.

வத்ஸலாவைத் தாத்தாவைப் பார்த்துக்கொள்ளச் சொல்லிவிட்டு நாங்கள் – வீரர்கள் – பாம்படிக்கும் பணியை மறுபடியும் மேற்கொண் டோம். இதனிடையில் 'டென் அணாஸ்' என்று சொல்லப்படும் பத்மநாப ஐயங்கார் வந்து சேர்ந்தார். அவருடைய கொள்கை எல்லாருக்கும் ஒத்தாசை பண்ணியே ஒழிப்பது என்பது. 'வேண்டாம்'

என்று சொன்னால் கேட்க மாட்டார். "என்னடாது பாம்பா?" என்றார். "ஆமாம் மாமா அடிக்கிறதுக்குள்ள சாக்கடைக்குள்ள போயி ஒளிஞ்சுண்டுடுத்து. எப்டி அடிக்கிறதுன்னு யோசிச்சுண்டிருக்கோம்."

"நல்லதா?" என்றார். புரியவில்லை.

"முழிக்கிறயே, நல்ல பாம்பா? நல்லதுன்னா நான் அடிக்கமுடியாது, சாந்திஹோமம் பண்ணணும்."

"அது என்னமோ! கேக்கலை மாமா இன்னும் அதை" என்றேன்.

"என்னடா, கிண்டலா? சரி சரி!"

"இல்லை மாமா. பழுப்பா கொசகொசன்னு இருந்தது அதான் தெரியும்."

வத்ஸலா அங்கேயிருந்து "மாமா அதைப் பார்த்தா நல்ல பாம்பு மாதிரியே தெரியலே. நான் பார்த்தேன். எதோ சாதுப்பாம்பு மாதிரித்தான் இருக்கு. அதை அடிக்க வேண்டாம்னுதான் தோணறது."

"சும்மாரு மூதேவி. நீ தாத்தாவைச் சரியாப் பார்த்துக்கோ. ஆம்பிளைகள் காரியத்தில் எல்லாம் வர வேண்டாம்" என்றேன். வத்ஸலா என்னைப் பார்த்து அழகு காட்டினாள். தாத்தா "பங்குனி ரதம் வரதா?" என்று கேட்டார். கோவிந்தன் சாக்கடைக்குள் ஈர்க்குச்சியால் குத்திப் பார்த்துக்கொண்டிருந்தான். அதுவும் எப்படி? பட்டாசுக்கு நெருப்பு வைக்கிறாற்போல சற்றுத் தூரத்திலிருந்து. "கோவிந்தா இதைவிட மெல்லிசா உனக்குக் குச்சி ஆம்படலியா?"

"பெரிசாக் குத்தினா நான் ஒண்டியாளு, இந்தப் பக்கம் என்ன பண்ணுவேன்?"

"அதுக்குன்னு காது குடையறாப்பலயா குத்தறது?"

"நீர்தான் வந்து குத்துமே" என்றான் சிவா.

"இத பார்றா, இதையெல்லாம் இப்படியெல்லாம் பண்ணா வெளில வராது, பட்டா! டிபிஜி கடைக்குப் போய் குங்கிலியம் வாங்கிண்டு வா. நிமிஷமா வெளில கொண்டுவந்துர்றேன்." இப்போது பலபேர் கூடியிருந்ததால் எந்தத் திசையிலிருந்து யார் உபதேசம் பண்ணுவது என்று விவஸ்தையில்லாமல் போய்விட்டது.

"குங்கிலியம் எல்லாம் வேண்டாம். பேசாம கழுதை மண்டபத்தில் ஒரு பிடாரன் இருக்கான், மகுடி ஊதியே வெளில கொண்டு வந்துருவான்."

"அவனவன் பாம்பு பத்திரமா இருக்கோல்லியோ?"

"டேய்! செவிட்டில அறைஞ்சேன்னா பாரு!"

"பங்குனி ரதம் எப்ப வரும்?"

"ரங்கா, உனக்கோ பழக்கமில்லை. நீ போய்த் திண்ணைல நின்னுக்கோ. நாங்க அடிக்கிறோம். வேடிக்கை பார்க்கறவா எல்லாம்

விலகி நின்னுண்டு அடிக்கிறவாளுக்கு வழிவிட்டா உபகாரமாக இருக்கும்" என்று சிவராமன் அதட்ட, அந்த வியூகம் கொஞ்சம் அகன்றது.

பத்மநாப ஐயங்கார் தம் வீட்டிலிருந்து சாம்பிராணிக் கரண்டி நெருப்பை ஊதிக் கொண்டுவர, ஒரு குடையையும் எடுத்துக்கொண்டு வர, பட்டா சிவராமன் சைக்கிளிலேயே போய்க் குங்கிலியம் வாங்கிக் கொண்டு வந்தான். அதை நெருப்பில் போட்டதும், ஊரே புகையாகி பத்மநாப ஐயங்கார் மந்திரவாதிபோல, அதைச் சாக்கடையின் பக்கம் 'தினமணி'யால் விசிறிக்கொண்டிருக்க, இந்தப் பக்கம் கோவிந்தன் பட்டா சிவராமன் மூவரும் பற்பல ஆயுதங்களுடன் காத்திருக்க, தெருவே கூடி பத்தடி அப்பாலிருந்து பல யோசனைகளைக் கூறிக்கொண்டிருந்தது.

அந்தப் பாம்புக்கு வேறு ஏதோ கவலை போலும். வெளியே வரவில்லை. இப்போது புகை 'ஆவாரா' கனவு சீன் போல அதிகமாகி பட்டா யாரு, தாத்தா யாரு என்று தெரியாத நிலையில், பத்மநாப ஐயங்கார் எதற்குக் குடையை விரித்துக்கொண்டார் என்பது புரிய வில்லை. "இத்தனை புகை போட்டதுக்கு முதலை கூட வெளில வந்திருக்கணுமே! சாக்கடைக்குள் இல்லியா? டேய் ரங்கா நீ பார்த்தியா?"

"கோவிந்தா, நீ பார்க்கலை?"

"நான் வந்தபோது பாம்பு இல்லை. இந்தப் பிள்ளைகளே பாம்பு விடறாங்களோ என்னவோ?"

"சே ... சே. சாமி சத்யமா சாக்கடைக்குள் போறதைப் பார்த்தேன்' என்றேன். இதற்குள் அஞ்சரை மணி லால்குடி பாசஞ்சர் வந்து சேர்ந்திருக்க வேண்டும். ஆபீஸ்காரர்கள் எல்லாம் திரும்பி வந்து கொண்டிருக்க, அதில் கேவி வந்தான். வந்த உடனே நிலைமையின் தலைமையை ஏற்றுக்கொண்டுவிட்டான். திண்ணையில் டிபன் பாக்ஸை வைத்தான். வேட்டியைக் காக்கி டிராயர் தெரியும்படியாக மடித்துக் கட்டிக் கொண்டான். "எங்கடா பாம்பு?"

"இதோ சாக்கடைக்குள்."

"கூழைப் பாம்பு கேவி! அடிக்க வேண்டாம்னு தோணறது" என்றாள் வத்ஸலா.

"அது என்ன பாம்பா இருந்தாலும் சந்தேகத்துக்கு அடிச்சே ஆகணும். பராக்கு பார்க்கறவா, எல்லோரும் நகர்ந்து நில்லுங்கோ. திண்ணைல ஏறிக்கங்கோ. ரங்கா, ஒரு கொடிக் குச்சி வேணும். குத்தறதைப் பலமாகக் குத்தணும். இந்த மாதிரி நகாஸ் வேலையெல் லாம் உதவாது. ஓய், என்ன புகையைப் போட்டுப் பைராகி மாதிரி, யாருக்கு ப்ரீதி? குச்சி கொண்டுவாடான்னா, இருக்கிறவா மூஞ்சி தெரியாம இப்படியா புகை போடுவா?'

நான் உள்ளேயிருந்து கொடிக் குச்சியை எடுத்துக்கொண்டு

அம்மா, "என்னடா?" என்று கேட்டதற்குப் பதில் சொல்லாமல் ஓடி வந்தேன்.

கேவி அஞ்சா நெஞ்சன். தைரியமாகச் சாக்கடைக்குள் கொடிக் கொம்பு முழுவதும் செலுத்திக் குத்துக் குத்து என்று குத்தினான். எனக்கு ரத்தம் உறைந்து போயிற்று. திடீரென்று புஸ் என்று சீறிக் கொண்டு முழங்கை உயரத்துக்குப் படம் எடுத்துக்கொண்டு வெளியே வரப்போகிறது என்று எதிர்பார்த்தேன்.

ஒன்றுமே நிகழவில்லை. கேவி அடைத்துக்கொண்ட சாக்கடையைப் போல நன்றாகக் குத்தினான். கடைசியில் "உள்ள மண்ணுளிப் பாம்புகூடக் கிடையாது. யாரோ கரடி விட்டிருக்காங்க."

"இல்லை கேவி, சைக்கிள் பார்ல இருந்தது, சிவராமன்தான் அடிக்கப் பார்த்தான். தப்பிச்சுண்டு ஓடி இதுக்குள்ள பூந்துண்டுடுத்து."

"சிவராமனா? பாம்பா? ஏண்டா, நீ எப்பவாவது மரவட்டையை யாவது அடிச்சிருக்கியா?"

"நீதான் அடியேன் . . . ரொம்பப் பேசறியே?"

"காட்டு, அடிக்கிறேன்" என்று சட்டென்று குச்சியைச் சாக்கடை யிலிருந்து உருவிச் சிவராமன் முன்னிலையில் 'தருட்' என்று அசைத்தான். ஒரு நிமிஷம் அவன் பயந்து போய்ப் பின்வாங்க, கேவி அட்டகாசமாகச் சிரித்தான். "இவன்தான் பாம்பை அடிக்கிறவனாக்கும்?"

பத்மநாப ஐயங்காரைப் பார்த்து, "ஓய் பெட்ரமாக்ஸ் ஏத்திட்டு வந்துரும். ராத்திரி இழுத்தடிக்கும்போல இருக்கு" என்று சொல்லி முடிப்பதற்குள், கேவி பாம்பைப் பார்த்துவிட்டான். இவர்கள் புகை போட்டதில் வெளியே வந்து, புகைப்படலத்தில்தான் அங்கே போயிருக்க வேண்டும். இல்லாவிட்டால் தாத்தா உட்கார்ந்திருந்த கயிற்றுக் கட்டிலின் காலில் அதற்கு என்ன வேலை?

"வத்ஸலா! அசங்காதே அப்படியே இரு, கட்டில் கால்ல இருக்கு பாரு."

"என்ன கேவி?"

"மூச்சுக்கூட விடாதே. அசங்காதே. அங்கேயே பஜ்ஜி பண்ணி விடலாம்."

"பங்குனி ரதம் எப்ப வரும்?" என்றார் தாத்தா.

வத்ஸலா 'வீல்' என்று கத்தி ஒரு எம்பாகக் குதித்து ஓடி விடுவாள் என்றுதான் எதிர்பார்த்தேன். அதற்கு மாறாகக் கீழே கிடந்த குச்சி ஒன்றை எடுத்துக்கொண்டு கட்டில் காலில் பத்திரம் இல்லாமல் தொற்றிக்கொண்டிருந்த பாம்பை லாவகமாகக் குச்சி முனையில் செருகி வாங்கிக்கொண்டுவிட்டாள்.

இப்போது பாம்பு அவள் நீட்டிக்கொண்டிருந்த குச்சி முனையில் பாதிப்பாதியாகத் தொங்கியது. அடிப்பாகம் முதல் முதலாகத்

தெரிந்தது. வெளுப்பாக இருந்தது. கொஞ்சம் மிரண்டாற்போல் இருந்த கண்களுடன் அடிக்கடி நாக்கை ப்ளிச் ப்ளிச் என்று உதறிப் பண்ணிக்கொண்டிருப்பதைத் தவிர வேறு ஒன்றும் விரோதமாகச் செய்யவில்லை.

வத்ஸலா பாம்பு கொண்ட குச்சியுடன் சிரித்துக்கொண்டே சிவராமன் அருகில் வந்து, "இந்தா பாம்பு. அடி" என்றாள். சிவராமன் பிய்த்துக்கொண்டு வேஷ்டி நழுவினது தெரியாமல் நாராயணையங்கார் வீட்டுத் திண்ணையில் போய் ஏறிக்கொண்டான். கேவி ஒருவன்தான் பக்கத்தில் இருந்தான்.

"விளையாடாதே, கீழே போடு அதை!" என்று அதட்டினான். வத்ஸலா பாம்பை எல்லாத் திசைகளிலும் காட்டினாள். அந்தந்த திசையில் கூட்டம் விலகியது. அம்மா இதற்குள் வெளியே வந்திருந் தாள். 'ஏய் குரங்கு, கீழே போடு. கடிச்சு வைக்கப் போறது' என்றாள்.

"இல்லைம்மா, இதைப் பார்த்தா கூழைப்பாம்பு மாதிரிதான் இருக்கு. ரங்கா ஒரு கூடைகொண்டு வாயேன். கூடைக்குள்ள போட்டுக் காட்டுக்குள்ள திரும்பக் கொண்டு விட்டுரலாம்! அடிக்க வேண்டாம்" என்றாள். இதற்குள் பாம்பு குச்சி நுனியில் பாலன்ஸ் பண்ணமுடியாமல் கீழே விழுந்துவிட சரசரவென்று சாக்கடையை நோக்கி ஓட, கேவி கிரிக்கெட் பாட்டைச் சட்டென்று எடுத்துக் கொண்டு மடேல் என்று அதைத் தரையில் வைத்து ஒரு சாத்து சாத்தினான்.

வத்ஸலா "வேண்டாம்! வேண்டாம்! வேண்டாம்! கேவி அடிக்காதே, அடிக்காதே. அது என்ன பண்ணித்து? அடிக்காதே" என்று அலறியதைப் பொருட்படுத்தாமல் திரும்பத்திரும்ப அதை அடித்தான். பாம்பின் முன்பக்கம் கத்திரிக்காய்த் துவையல் மாதிரி ஆகிவிட்டது. பின்பக்கம் பழைய ஞாபகத்தில் கொஞ்சம் உயிர் இருந்தாற்போல, லேசாக அழகாக வாலை நெளித்துவிட்டு நின்று போயிற்று. பாக்கியையும் சப்பட்டையாக்கி, கேவி சிரித்துக்கொண்டே அதைக் குச்சி முனையில் பொறுக்கித் தேர் முட்டியில் கொண்டு போய்த் தகனம் பண்ணினார்கள்.

வத்ஸலா, "பாவம் என்ன பண்ணித்து அது உங்களை எல்லாம்? எதுக்காகக் கொன்னேள்?" என்று ரொம்ப நேரம் விக்கி விக்கி அழுதது எனக்கு வியப்பாக இருந்தது.

அதற்கப்புறம் சிவராமன் வத்ஸலாவைப் பார்க்க வருவதில்லை. என் தங்கையை நான் புரிந்துகொள்ள ஆரம்பித்தேன்.

1983